[திரு. மீ. கலியாணசுந்தரம்] [4th July 1962

இரண்டு வருடங்களுக்கு முன்னர் என் கைக்கு வந்தது. பழைய சட்ட சபையிலே கூட நான் இதைப்பற்றி ஒரு கேள்வி கொடுத்திருந்தேன். ஆனால் அதற்கு விடையளிக்கப்படவில்லை. என்னுடைய பழைய ரிக்கார்டுகளிலிருந்து அந்த சுற்றறிக்கையை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன். தங்கள் மூலமாக அதை கனம் அமைச்சர் அவர்களிடம் கொடுக்கிறேன். அதை கவனிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

(கனம் அங்கத்தினர் சுற்றறிக்கையை கனம் மருத்துவ அமைச்சர் அவர்களிடம் சமர்ப்பித்தார்.)

### III.—ADJOURNMENT MOTION *re* POWER-CUT IN THE STATE.

**கனம் சபாநாயகர் :** கனம் அங்கத்தினர் ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் மின்சாரப் பற்றுக்குறையைப் பற்றி ஒரு ஒத்திவைப்புப் பிரேரணை நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அது இப்பொழுதுதான் கொடுக்கப்பட்டது. அதில் குறிப்பிட்டுள்ள விஷயத்தையும் சேர்த்து நாளையதினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் 41-வது விதியின்கீழ் கொடுக்கப்போகிற ஸ்டேட்மெண்டில் பதில் சொல்லுவார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆதலால் இந்த ஒத்திவைப்பு பிரேரணைக்கு அவசியமில்லை. நான் இன்னொன்று சொல்ல விரும்புவது என்னவென்றால் :

"A member desirous of moving a motion for an adjournment of the business of the House for the purpose of discussing a definite matter of urgent public importance shall, before the commencement of the sitting of the Assembly at which he proposes to ask for leave of the House to make his motion, hand to the Secretary three copies of a statement in writing of the matter proposed to be discussed, and obtain the Speaker's consent to his asking for leave to make the motion".

மூன்று காப்பிகளுடன் முன்னதாகவே கொடுத்தால், ஒருவேளை சம்பந்தப்பட்ட அமைச்சருக்கு அனுப்பி, அவர்களும் தயாராக வரலாம் என்ற நோக்கத்தோடு போட்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. இனிமேல் அவ்வாறு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்று நேரம் இல்லாத காரணத்தினாலே திரு. சா. கணேசன் அவர்கள் திடீரென்று கொடுத்திருக்கலாம். இந்த அட்ஜர்ன்மென்ட் மோஷனுக்கு அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன். நாளைக்கு கனம் மந்திரி அவர்கள் கொடுக்கப்போகும் ஸ்டேட்மென்டில் இதையும் சேர்த்துச் சொல்லுவார்கள் என்று நினைக்கிறேன்.

**திரு. சா. கணேசன் :** இந்த ஒத்திவைப்பு பிரேரணையைக் கொடுத்ததின் நோக்கம் கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்கு இந்த விஷயத்தைக் கொண்டுவரவேண்டும் என்பதற்காகத்தான். வட ஆற்காடு ஜில்லாவிலே ஆரணி பிர்காவிலே மூன்று

நாட்களாக விவசாயத்திற்குத் தண்ணீர் எடுப்பதற்குரிய மோட்டார்களுக்கு அளிக்கப்படும் மின்சாரத்தை முழுவதும் நிறுத்திவிட்டார்கள்.

**திரு. ஜே. மாதா கடவுர் :** On a point of order, Sir. கனம் சபாநாயகர் அவர்கள் நாளையதினம் கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுவார்கள் என்று தீர்ப்பு சொன்னபிறகு, மறுபடியும் கனம் அங்கத்தினர் அதை எடுத்துச் சொல்லுவது முறையா என்று கேட்கிறேன்.

**திரு. சா. கணேசன் :** இதை நான் இப்பொழுது பிரேரேபிக்கவில்லை. ஏன் இதைக் கொண்டு வந்தேன் என்பதைப் பற்றித் தான் சொல்லுகிறேன். இதைப்பற்றி எனக்கு காலை 7-50 மணிக்குத் தான் டெலிபோன் மூலம் செய்தி வந்தது. ஆகையால்தான் இங்கே வந்து மிகவும் அவசரமாக எழுதிக்கொடுத்தேன். குற்றம் சொல்லவேண்டும் என்பதற்காக அல்ல, நிவாரணம் கிடைக்க வேண்டுமென்பதற்காகத்தான் இதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அதை, நாளை எடுத்துக்கொள்வதற்கு கனம் சபாநாயகர் அனுமதி தந்ததற்கு எனது நன்றி. இனி அவர்கள் குறிப்பிட்டபடி, மூன்று பிரதிகளை எவ்வளவு காலம் முன்னதாகவே கொடுக்க முடியுமோ, அவ்வளவு முன்னதாகவே கொடுப்பதற்கு முழு முயற்சி எடுத்துக்கொள்வேன் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Thanks.

## IV.—ANNOUNCEMENT.

### THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1962. 9-00 a.m.

MR. SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction in the Madras Legislative Assembly of the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1962.

## V.—GOVERNMENT BILL.

### THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1962.

THE HON. SRI V. RAMAIAH : Sir, I beg leave to introduce the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1962.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1962'.

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI V. RAMAIAH : Sir, I introduce the Bill, Sir.

MR. SPEAKER : The Bill is introduced.